12th September 1958]

SRI N. MAHALINGAM : ஸ்ரீ கரையாளர் அவர்கள் திருவாங்கூர் பிரஜையாக இருந்த காரணத்தால், இன்னும் சென்னையை "சமஸ்தானம்" என்றே மதிக்கிருரா ?

MR. SPEAKER : அது யாரைக் கேட்பது ? மந்திரியையா ?

SRI A. VEDARATHNAM : கேரள மந்திரிகள் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபடாவிட்டாலும், பர்மனன்ட் சர்விஸ் உத்யோகஸ்தர்கள் நேரிடையாக ஈடு பட்டார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

SRI M KALYANASUNDARAM : ஆன் எ பாய்ன்ட் ஆப் ஆர்டர், ஸார்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் சொல்லிவிடுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : No, I am on a point of order.

MR. SPEAKER : Let me hear him.

SRI M. KALYANASUNDARAM : How is this question in order, Sir ? It does not deal with our Government or our State.

MR. SPEAKER : Let the hon. Member, Sri Vedarathnam, please repeat the question. I did not catch the question.

SRI A. VEDARATHNAM : மந்திரிகள் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டார்கள், அது தவறு என்று சொன்னுர்கள். நான் கேட்டேன் அங்குள்ள பர்மனன்ட் சர்விஸ் உத்யோகஸ்தர்கள் நேரிடையாக ஈடுபட்டார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா என்று.

MR. SPEAKER : What is the objection there ?

SRI M. KALYANASUNDARAM : He is asking about the services with regard to the elections conducted by the Kerala Government.

MR. SPEAKER : There is nothing wrong in asking the question. The Hon. Minister may reply that he does not know. (Laughter.) I am not suggesting any answer.

THE HON. SRI C. SUBRAMANIAM : கேரள அரசாங்க உத்தியோகஸ்தர்கள் என்ன பண்ணினுர்கள் என்பதற்கு அதிகார பூர்வமான தகவல் கிடையாது.

• SRI A. GOVINDASAMY : கனம் அமைச்சர்கள் தேவிகுளம், பீர்மேடு முதலிய இடங்களுக்குச் சென்று தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டார்கள் என்பது உண்மையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்காகத்தானே போயிருந்தார்கள். (சிரிப்பு.)

SRI D. S. AUTHIMOOLAM : திட்டங்கள் அநேகம் நிறைவேற்றுவதற்கு இருக்கும்போது மேடு, குளங்கள் போன்ற பல இடங்களுக்கு கனம் மந்திரிகள் போகலாமா ?

MR. SPEAKER : அந்தக் கவலை மந்திரிகளுக்குத்தான் ; உங்களுக்கு அதைப்பற்றி என்ன கவலை ?

*Dakshina Pradesh*

* 192 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government have received any communication recently from the Chief Minister of Andhra

Pradesh about the formation of Dakshina Pradesh comprising Andhra Pradesh, Madras and Mysore States?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Harijan hostels*

*196 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அரசாங்கத்தாரால் நடத்தப்படும் ஹரிஜன மாணவ விடுதிகளில் எத்தனை விடுதிகள் அரசாங்கக் கட்டிடங்களிலே இருக்கின்றன ?

(ஆ) எத்தனை ஹாஸ்டல்கள் வாடகைக் கட்டிடங்களிலே இருக்கின்றன ?

(இ) வாடகைக் கட்டிடங்களிலே இருக்கும் ஹரிஜன மாணவ விடுதிகளுக்காக 1957–58-ம் ஆண்டில் செலுத்தப்பட்ட வாடகைத் தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : (அ) 4.

(ஆ) 54.

(இ) ரூ. 39,731.

SRI P. G. MANICKAM : வாடகைக் கட்டடங்களில் இருக்கும் ஹாஸ்டல்களுக்கு ஆயிரக்கணக்கான ரூபாய் செலவழிக்கப்படுகின்றன. ஆகையால் அரசாங்கம் பொதுஜனங்களிடமிருந்து ஒரு கடனை எழுப்பி அந்தக் கட்டடங்களைக் கட்டுவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளுவார்களா ? மேலும் வாடகை கொடுக்கப்படுவதற்குச் செலவிடப்படும் தொகையிலிருந்து வாங்கிய கடனுக்கு வட்டி கட்டுவதற்கும் சௌகர்யம் ஏற்படலாம். அதனால் கடன் வாங்கி கட்டடங்களைக் கட்டுவதற்கு அரசாங்கம் ஏதாவது திட்டம் செய்வதற்கு முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அப்பேற்பட்ட எந்த திட்டமும் சர்க்காரிடம் இப்பொழுது இல்லை. எங்கெங்கே கட்டடங்களைக் கட்ட வேண்டுமோ அந்த இடங்களிலெல்லாம் ஹாஸ்டல் கட்டிடங்களைக் கட்டுவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொண்டுதான் வருகிறார்கள்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : அரசாங்கத்தாரால் நடத்தப்படும் ஹரிஜன மாணவிகளின் விடுதிகள் ஹரிஜன் வெல்பேர் ஆபிஸரால் கவனிக்கப்பட்டு வருகிறது. பெண்கள் விடுதிகளைப் பெண்களே இருந்து கவனிப்பதற்கு வேண்டிய வசதிகளைக் கனம் அமைச்சரவர்கள் செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : சில ஹாஸ்டல்களில்தான் அப்படி இருக்கிறார்கள். அதற்காக அதிகாரிகளை நியமிக்க முடியாது.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இந்த அரசாங்கத்தின் உதவி பெற்று நடத்தப்பட்டு வரும் ஹாஸ்டல்கள் ஐந்து வருஷங்கள் நடந்த பிறகுதான் அதற்கு கட்டட உதவி அளிக்கப்படும் என்று இருக்கிறது. இதைப்பற்றி சாதாரணமாக அந்த ஹாஸ்டல்களுக்கு வருகிறவர்கள் விசிட்டிங் புஸ்தகங்களில் இப்படிப்பட்ட குறை இருக்கிறது என்று எழுதுகிறார்கள். ஆகவே அப்படிப்பட்ட ஹாஸ்டல்கள் இரண்டொரு வருஷங்கள் நடந்தாலேயே அவைகளுக்கு கட்டட கிராண்ட் கொடுப்பதற்கு சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: அப்படி நன்றாக நடத்தப்படும் ஹாஸ்டல்களுக்கு இந்த விஷயமாக பரிசீலனை செய்யப்படும்.

SRI K. ANBAZHAGAN : ஆதிதிராவிட தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கான உணவு நிலையங்கள் விடுதிகள் சென்னை மாகாணத்தில் மேலும் பல ஆண்டுகள் நிரந்தரமாக தொடர்ந்து நடக்க வேண்டிய நிலை